


# புது நம்பிக்கை

பெறுவோம்! கொடுப்போம்!!

தனி பிரதி-ரூ. 10/-

மலர் - 2 ஜனவரி - மார்ச் - 2018 இதழ் - 1

## என்னாலே உன் நாட்கள் பெருகும்,
## உன் ஆயுசின் வருஷங்கள் விருத்தியாகும்.

(நீதி. 9:11)

2018

# தொழுநோயாளிகளின் குழந்தைகள் இல்லம்

ஆந்திர மாநிலத்தில் இந்த இல்லம் 34 குழந்தைகளுடன் செயல்பட்டு வருகிறது. இவர்களின் பெற்றோர் தொழுநோயாளிகள் ஆனபடியினால் அவர்களால் வேலை செய்து இக்குழந்தைகளின் அடிப்படை தேவைகளான உணவு மற்றும் உடை போன்றவைகளை சந்திக்க இயலவில்லை. பள்ளிச் செல்லும் நாட்களில் மட்டும் இக்குழந்தைகளுக்கு பள்ளியில் மதிய உணவு வழங்கப்படுகிறது. ஆகவே இக்குழந்தைகள் காலையிலும் இரவிலும் உணவு கிடைக்காமல் பசியால் அல்லல் படுகின்றனர். இக்குழந்தைகளின் பரிதாப நிலையைக் கண்ட இக்கிராம மிஷனெரி மற்றும் சபையார் இக்குழந்தைகளுக்கு காலையிலும் இரவிலும் தங்களால் இயன்ற அளவு உணவு சமைத்து கொடுத்து உதவுகின்றனர். இருப்பினும் இந்த ஏழை சபையால் குழந்தைகளுக்கனா உணவு தேவைகளை தினமும் சந்திக்க இயலாமல் சிரமப்படுகின்றனர். இந்த ஏழை குழந்தைகளுக்காக உதவும் இந்த சபையுடன் இணைந்து நீங்களும் உதவலாம். இக்குழந்தைகளுக்காய் உங்கள் தனி, குழு, சபை மற்றும் குடும்ப ஜெபங்களில் ஜெபிக்க அன்புடன் வேண்டுகிறோம்.

ஒரு குழந்தைக்கான மாத உணவு தேவை ரூ. 500/–

இக்குழந்தைகளை சந்திக்க மற்றும் உதவ விரும்புபவர்கள் தொடர்பு கொள்ளவேண்டிய எண்: 9443155120



## மிஷனரிகளுக்கு மருத்துவ உதவி செய்தல்



Address:-
Newhope Mission
75/33, Isaac Street,
Nagercoil - 629001

மிஷனரி பணிக்களங்களில் பணியாற்றும் பணியாளர்கள் தேவ ராஜ்யத்தின் மகிமையான பணியை செய்து வருகின்றனர். அவ்வாறு பணியாற்றும்போது மிஷனரிகள் சந்திக்கும் இன்னல்கள், இடர்பாடுகள் ஏராளம் ஏராளம். இத்தனை இடர்களுடன் சில மிஷனரிகள் உடல் ஆரோக்கியம் சார்ந்த பல்வேறு நோய் நொடிகளுக்கு ஆளாகின்றனர். அவ்வித நோய்கள் தாக்கும்போது சில மிஷனரிகள் உரிய சிகிட்சைக்கான நிதி வசதியின்றி தவித்து வருகின்றனர்.

இவ்வித இக்கட்டான வேளைகளில் மிஷனரிகளின் சிறந்த மருத்துவ சிகிட்சைக்கு புதுநம்பிக்கை மிஷன் உதவி செய்து வருகிறது. ஏழை மிஷனரிகள் மருத்துவ சிகிட்சைக்கு கருத்துடன் ஜெபிப்போம். உதவ முன்வருவோம்.

மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ள: 9442935233

# புது நம்பிக்கை

பெறுவோம்! கொடுப்போம்!!

மலர் - 2 ஜனவரி -மார்ச் - 2018 இதழ் - 1

## உள்ளே . . .



ஆசிரியர்

S. மோசஸ் ராஜ் – 7502071054

ஆசிரியர் குழு

C. பால் பென்னட் சிங் –9442315512௦

ஆ. ரவி குமார் – 9442935233

S. வசந்த நேசம் – 9789183072

D.V. பிபின் சஜீவ் – 9443018392

A. சுதா ஏசாயா – 9486083188

முகவரி :

**புது நம்பிக்கை**

75/33, ஐசக் தெரு,

நாகர்கோவில் – 629 001

தனி பிரதி. 10/–

ஆண்டு சந்தா. 100/–

ஆயுள் சந்தா. 2000/–

தனி சுற்றுக்கு மட்டும்

**இயக்குநர் மடல்!**

*கர்த்தருக்குள் அன்பானவர்களே!*

***இயேசுகிறிஸ்துவின் இனிய நாமத்தில் புத்தாண்டு நல் வாழ்த்துக்கள்.***

நமது ஊழியங்களிலும், மிஷனெரி பணிக்களங்களிலும், மிஷனெரிகளின் வாழ்விலும் தேவன் உண்மை உள்ளவராயிருந்தார். அவ்வாறே நமது ஊழியங்களுக்கு உதவி செய்த குடும்பங்கள் மற்றும் சபைகளிலும் கர்த்தரின் ஆசீர்வாதம் இருந்தமைக்காக அவருக்கு நன்றி செலுத்துகிறோம்.

தேவ கிருபையால் ஏராம்பாளையம் சபை கட்டி முடிக்கப்பட்டது. மேலும் தற்போது ஆந்திர மாநிலத்தில் மேலும் ஒரு சபை கட்டப்பட்டு வருகிறது. அதுபோலவே சில மிஷனெரிகளுக்கு மருத்துவ அறுவை சிகிட்சைக்கான உதவியும் வேறு சில மிஷனெரிகளுக்கு கல்வி உதவி தொகையும் வழங்கப்பட்டது. அது போலவே கிறிஸ்மஸ் பண்டிகை காலத்தில் சில மிஷனெரி குடும்பங்களுக்கு கிறிஸ்மஸ் பரிசுகள் வழங்கப்பட்டன. இவைகளுக்கு உதவிய குடும்பங்களுக்காக தேவாதி தேவனுக்கு ஸ்தோத்திரம் செலுத்துகிறோம்.

2018–ம் ஆண்டு மேலும் சில சபைகள் கட்டவும், மிஷன் பணியாளர்களுக்கு பல்வேறு உதவிகள் வழங்க ஜெபித்து வருகிறோம். தாங்களும் குடும்பமாக, சபையாக இவைகளுக்காக ஜெபிக்கும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இம்மட்டும் கைவிடாமல் நம்மை காத்து வரும் தேவன், இனிமேலும் நமக்கு போதுமானவராக இருந்து காப்பார். அவர் கிருபை காலைதோறும் புதிதாக இருக்கும். அவரது கிருபை மட்டுமே இவ்வாண்டின் ஒவ்வொரு நாளிலும் நமக்கு புது நம்பிக்கை தர வல்லது.

தேவ கிருபை நம் அனைவரோடும் இருப்பதாக!

தேவ கிருபையால், சகோ. ஆ. ரவி குமார்

# மனம் புதிதாகட்டும்

நமது ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் பிறப்பின் சரித்திரத்தின் படி வரலாற்றில் 2018 ஆண்டுகள்ஆகி விட்டன. இந்த புதிய ஆண்டையும் காணவும், மகிழ்ச்சியோடிருக்கவும் கிருபை செய்த தேவாதி தேவனுக்கு நன்றி கூறுவோம். கடந்த ஆண்டில் வாழ்வில் வந்த பாடுகள், சோதனைகள், வேதனைகள் அனைத்திலும் நம்மோடிருந்து நம்மை காத்து வந்தவர் இந்த புதிய ஆண்டிலும் அப்படியே செய்வார். அவர் உண்மையுள்ளவர். (1தெச.5:24)

உண்மையுள்ள தேவன் இந்த ஆண்டு நம்மிடம் எதை எதிர்பார்க்கிறார் ? இக்கேள்வியை ஒரு முறையாவது நம்மை நாமே கேட்டிருக்கிறோமா ? இதுவரை கேட்டதில்லை எனில் இப்போது கேட்டுப்பார்ப்போம்.

நம்மிடம் அவர் அனேக காரியங்களை எதிர்பார்க்கிறார் அல்லவா ? விசுவாசத்தை எதிர்பார்கிறார், வேதாகமத்தை படிப்பதை எதிர்பார்க்கிறார், ஜெபிப்பதை எதிர்பார்க்கிறார், பிறரை நேசிப்பதை எதிர்பார்க்கிறார். இவைகளை மட்டுமா, இல்லை– இன்னும் அனேக காரியங்களை நாம் செய்ய வேண்டும் என எதிர் பார்க்கிறார். முதலாவதாக மனம் புதிதாக வேண்டும் என எதிர்பார்க்கிறார். மனம் புதிதானால் மட்டுமே வாழ்வில் மகிழ்ச்சியுடனும், சந்தோஷத்துடனும் நாம் வாழ முடியும்.

ரோமர் 12:2 ‘‘நீங்கள் இந்த பிரபஞ்சத்திற்கு ஒத்த வேஷந்தரியாமல், தேவனுடைய நன்மையும் பிரியமும் பரிபூரணமான சித்தம் இன்னதென்று பகுத்தறியத்தக்கதாக உங்கள் மனம் புதிதாகிறதினாலே மறுரூபமாகுங்கள்’’ என கூறுகிறது.

ஆகவே நமது மனம் புதிதாக வேண்டும் என தேவன் எதிர்பார்க்கிறார், விரும்புகிறார். நமது மனம் புதிதாக என்ன செய்ய வேண்டும் ?

## அ) புது சிருஷ்டி ஆகுதல்

‘‘இப்படியிருக்க ஒருவன் கிறிஸ்துவுக்குள்இருந்தால் புது சிருஷ்டியாயிருக்கிறான்; பழையவைகள் ஒழிந்து போயின, எல்லாம் புதிதாயின’’ (2 கொரி. 5:17)

கடந்த ஆண்டின் கஷ்டங்கள், பாடுகள், தோல்விகள் நம்மை விட்டு போய்விட வேண்டும் என்பது நமது விருப்பம். அதைவிட மேலானது கடந்த காலங்களில் நமது வாழ்வை நாசப்படுத்திய பாவங்கள் நம்மை விட்டு அகல நாம் தேவனை நோக்கி மனந்திரும்ப வேண்டும்.

இயேசு கிறிஸ்து நமது பாவத்துக்காக மரித்து, மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தார் என்பதை விசுவாசித்து வாழ ஆரம்பிப்பதே உண்மையான

மனந்திரும்புதலின் ஆரம்பம். (1கொரி. 15:3,4; ரோமர் 10:9,10). இவ்வாறு கிறிஸ்துவுக்குள் வருபவர் புது சிருஷ்டியாக மாறுகிறார். தேவனுடைய பிள்ளையாக ஆகிறார். புது சிருஷ்டியான ஒருவரின் மனம் சிந்தனையில் புதிதாக வேண்டும்.

## ஆ) புதிதாய் பிறந்த குழந்தையின் விருப்பம்

''நீங்கள் வளரும்படி புதிதாய் பிறந்த குழந்தைகளைப்போல் திருவசனமாகிய களங்கமில்லாத ஞானப்பாலின் மேல் வாஞ்சையாயிருங்கள்'' (1பேதுரு 2:3)

பிறந்த குழந்தைகள் பிறந்தவுடனேயே தாய்பாலுக்கு அழுவது இயல்பு. பிறந்த குழந்தை தாய் பாலுக்காக அழவில்லை எனில் குழந்தையிடம் ஏதோ குறையிருக்கிறது என்பர். அது போலவே இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பதால் புதிதாய் பிறந்தவன் தாய்பாலுக்கு அழும் குழந்தையைப்போல் தேவனுடைய வார்த்தை மேல் வாஞ்சையாக இருக்க வேண்டும். தாய் பாலில் குழந்தைக்கான அனைத்து போஷாக்கு சத்துக்களும் அடங்கியுள்ளன. அதுபோல் தேவனுடைய வார்த்தையான திருவசனத்தில் ஒருவர் கிறிஸ்துவில் வளர்வதற்கும், மனம் புதிதாக மாறுவதற்கும் தேவையான அனைத்தும் உள்ளன.

பரிசுத்த வசனங்களை தினமும் வாசிப்பதால் மட்டுமே நமது மனம் புதிதாகும். மனம் புதிதாகுதலின் முதற்படி மனந்திரும்புதல் எனில், இரண்டாம் படி தேவனுடைய வசனத்தை தியானித்து வாசிப்பதாகும். தேவனுடைய வசனம் நம மனதை புதிதாக்கி உற்சாகமாக வைத்துக்கொள்ள உதவும்.

''உமது வேதம் என் மனமகிழ்ச்சியாயிராதிருந்தால், என் துக்கத்திலே அழிந்துபோயிருப்பேன்'' என்கிறான் சங்கீதக்காரன் (சங்.119:92). இந்த ஆண்டு நமது துக்கம் சந்தோஷமாக மாற களங்கமில்லாத ஞானப்பாலான வசனத்தை தினமும் வாசிப்போம். அது நமது மனதை புதிதாக்கும். வாழ்வை மகிழ்ச்சியாக்கும்.

–எச்.ஆர்.கே.

## புது நம்பிக்கை கிரீடம் – 2018

2017–ம் ஆண்டு நமது பத்திரிகையில் வெளிவந்த வேதாகம கேள்விகளுக்கு சரியான பதில் எழுதியவர்களுக்கு பரிசு வழங்கும் விழா நாகர்கோவிலில் நடைபெற உள்ளது. போட்டியில் கலந்து கொண்டவர்கள் இவ்விழாவில் கலந்து பரிசுகளை பெற்றுக்கொள்ளும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

நாள் : 15–01–2018 நேரம் : மாலை 4.00 மணி

இடம் : 23, ஈஸ்ட் ஆப் தெரு, (East of Street) நாகர்கோவில் –1

– ஆசிரியர்

# நித்திய ஜீவன்

பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவராகிய திரியேக தேவனுக்கு, இன்றும் என்றும் உள்ள சதாகாலங்களிலும் மகிமை உண்டாவதாக. வாசகர்களாகிய உங்களுக்கு என்னுடைய புத்தாண்டு வாழ்த்துக்களை தெரிவித்துக்கொள்கிறேன். நாம் கடந்த இதழிலே “தேவன் மாம்சத்தில் வெளிப்பட்டார் ” என்கிற வாசகத்தின் அர்த்தத்தை அறிந்து கொண்டோம். இந்த இதழிலே பைபிளிலே முக்கியத்துவப்படுத்தி சொல்லப்பட்டிருக்கும் வார்த்தைகளில் ஒன்றாகிய “நித்திய ஜீவனைக்” குறித்து அறிந்து கொள்ளவிருக்கிறோம்.

## 01. நித்திய ஜீவன் – வார்த்தை விளக்கம்

நித்திய ஜீவன் (Eternal life) என்கிற வார்த்தையானது கிறிஸ்து மார்க்கத்திற்கே உரிய ஒரு தனித்துவம் வாய்ந்த வார்த்தையாகும். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து முதற்கொண்டு அப்போஸ்தலர்கள் வரைக்கும் இந்த பதத்தை அதிகமாக பயன்படுத்தியிருக்கிறார்கள். இந்த நித்திய ஜீவனானது இரட்சிக்கப்படுகிற அனைவருக்கும் தேவனால் இலவசமாக கொடுக்கப்படுகிற ஆவிக்குரிய ஆசீர்வாதங்களில் ஒன்றாகும். (எபே.1:3:;ரோ.6:23). சுருங்கச் சொன்னால் “நித்திய ஜீவன்” என்கிற வார்த்தையானது இரட்சிக்கப்பட்டவர்கள், அதாவது, இயேசுகிறிஸ்துவே உயிர்த்தெழுதலும் ஜீவனுமானவர் என்கிற சத்தியத்தை விசுவாசித்து மீட்கப்பட்டவர்கள் (யோ.11:25) அந்த நொடி முதற்கொண்டு சதா சர்வ நாட்களிலும் தேவனோடு ஐக்கியம் கொண்டவர்களாய் ஜீவிப்பார்கள் என்பதை காண்பிக்கிறது. (யோ.17:3)

## 02. நித்திய ஜீவன் பைபிள் குறிப்புகள்

நித்திய ஜீவன் என்கிற பதமானது புதிய ஏற்பாட்டிலே 43 தடவைகள் குறிப்பிடப்பட்டுள்ளது. பழைய ஏற்பாட்டிலே இதைக் குறித்த முன்னறிவிப்புகள் கொடுக்கப்பட்டாலும் (தானி.12:2) இது புதிய ஏற்பாட்டு வெளிப்படாகும். நித்திய ஜீவன் என்கிற பதமானது பைபிளில் தானி.12:2; மத்.19:29; யோ.3:16,36; யோ.6:40; யோ.10:28; ரோ.6:22,23, கலா.6:8; 1பேது.3:7; 1யோ.2:25; 5:11; மற்றும் பல வாக்கியங்களில் வருகிறது.

நித்திய ஜீவனானது பைபிளிலே கிரேக்க மொழியிலே

ஜீவன்–சோயீ (Zoe)

நித்தியம்–ஆயோனியோஸ் (AIONIOS) என வருகிறது.

## 03. தேவனுடைய நித்திய தன்மையும், மற்றும் எல்லா மனிதருடைய நித்திய வாழ்வு மற்றும் இரட்சிக்கப்பட்டோருடைய நித்திய ஜீவன் இவற்றிற்கு இடையேயுள்ள ஒற்றுமை வேற்றுமை

தேவன் ஒருவரே நித்தியமானவர் (1தீமோ.6:15,16) தேவனுடைய நித்திய தன்மையானது அவருக்கு துவக்கமும் முடிவும் இல்லாத நிலையைக் குறித்து பேசுகிறது. இந்த குணாதிசயம் ஒரே தேவனாகிய பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவராகிய மூன்று நபர்களுக்கு மட்டுமே காணப்படுகிறது. தேவனைத் தவிர்த்த மற்ற அனைவருக்கும் துவக்கம் உண்டு என அறிகிறோம்.

மனிதனைத் தவிர்த்த அனைத்து ஜீவராசிகளுக்கு ஒரு துவக்கமும் ஒரு முடிவும் உண்டு. அவைகள் உயிரிழந்தவுடன் அழிந்து விடுகின்றன.

எல்லா மனிதர்களுக்கும் ஒரு துவக்கம் உண்டு. ஆனால் முடிவு இல்லை. மனிதன் மற்ற மிருகங்களைப் போல் அல்லாமல் ஒரே சரீரத்திலே புறம்பான மற்றும் உள்ளான மனிதன் என்கிற நிலையிலே தேவனால் படைக்கப்பட்டிருக்கிறான். இதிலே சரீர மரணத்தோடு புறம்பான சரீரம் அழிந்து போனாலும் உள்ளான மனிதன் நித்திய காலமாய் வாழக்கூடியவனாயிருக்கிறான். புறம்பான சரீரமும் ஒரு நாளிலே மீண்டும் உயிர்த்தெழும். ஆனால், இயேசு கிறிஸ்துவினால் தன்னுடைய இந்த உலக வாழ்விலே மீட்பை பெற்றுக்கொள்ளாத எந்த மனிதனும் நித்திய வாழ்க்கையுடையவனாயிருந்தும், அக்கிரமங்களிலும் பாவங்களிலும் மரித்தவனாய் (எபே.2:1; ரோ.3:23) தேவனிடத்திலிருந்து சதா காலங்களிலும் பிரிக்கப்பட்டவர்களாய் ஜீவனைக் காணாமல் (யோ.3:36) ‘‘நித்திய ஆக்கினையை அனுபவிப்பார்கள்.

## 04. பரிசாகிய நித்திய ஜீவன் பெறும் முறை

நித்திய ஜீவன் இல்லாதவர்கள் பரலோகத்தில் பிரவேசிக்கமாட்டார்கள் என்பதால் ஒவ்வொரு மனிதனும் அதை பெற வேண்டிய கட்டாயத்தில் உள்ளான். அது தேவனுடைய கிருபையினாலே இயேசு கிறிஸ்துவிலே பரிசுத்த ஆவியானவர் மூலமாய் இலவசமாய் கொடுக்கப்படுகிறது. நம்முடைய சுய கிரியைகளினால் அல்ல. (எபே.2:8–9) ஆனால் இந்த பரிசாகிய நித்திய ஜீவனைப் பெற ஒரே ஒரு நிபந்தனை உண்டு.

இயேசு கிறிஸ்துவைக் குறித்த நம்முடைய நிலைப்பாடும் விசுவாசமுமே நித்திய ஜீவனைத் தீர்மானிப்பதாகும். 1தீமோ.1:16; 1யோ.5:10–13,20) அதாவது நித்திய ஜீவனை தடை செய்கிற நமது பாவ நிலையை உணர்ந்து. (ரோ.3:23; 6:23) அதற்கு பரிகாரமாகிய இரட்சிப்பின் சுவிசேஷத்தை (1கொரி.15:1–4) விசுவாசித்து இயேசு கிறிஸ்துவுக்குள் இணைக்கப்படுகிறவன் (1கொரி.12:12; கலா.3:27) நித்திய ஜீவனை பெறுகிறான். அது முதற்கொண்டு அது சதாகாலங்களிலும் தொடரும். (யோ.3:36; யோ5:24; 6:47) நித்திய ஜீவன் நாம் மறுபிறப்பு அடையும்போது

நமக்குள் செலுத்தப்படுகிறது. (யோ.3:3–7; தீத்து 3:5–7) இது மாற்றப்படலாகாது. (1 யோ.2:25; யோ.10:28–30) இது விசுவாசிகளுக்கு மட்டுமே. (யோ.3:18)

## 05. நித்திய ஜீவனை சுய கிரியைகளினால் சம்பாதிக்க முடியாது

நித்திய ஜீவனை பெறும் முறையைக் குறித்து பார்த்துவிட்டோம். ஆனால் சிலர் பைபிளில் சில வாக்கியங்களைக் குறித்து தவறாக புரிந்து கொண்டு நாம் நித்திய ஜீவனை பெறவும் காத்துக்கொள்ளவும் நமது சொந்த கிரியைகள் அவசியம் என தவறாக போதிக்கின்றனர்.

மத்.19:17,29; மாற்.10:17–18,30: லூக்.18:18–19,30 ல் வரும் சம்பவத்திலே, இயேசு கிறிஸ்து மனிதன் தன் சுய கிரியைகளினாலே நித்திய ஜீவனைப் பெற முடியும் என்று போதியாமல், சுய நீதியினால் ஒருவனும் பூரணமாக முடியாது என அந்த செல்வந்தனுக்கு காண்பிக்கிறார். (யாக்.6:27–40)

ரோமர் 2:6–7ல் நற்கிரியைகளினால் நித்திய ஜீவன் வருகிறது என பவுல் போதியாமல், நற்கிரியைகளைச் செய்யும்போது நித்தியத்தில் அதனுடனே வருகிற பலன்களைப்பற்றி பேசுகிறார். (யோ.4:36; 1கொரி.3:2; கொரி. 5; கலா.6:8–10)

1 தீமோ. 6:11–12ல் ''நித்திய ஜீவனைப் பற்றிக்கொள்'' என்பது நித்திய ஜீவனுக்கேற்ற நற்கிரியைகளை நாம் செய்ய வேண்டும் என பைபிள் போதிக்கிறது. (1தீமோ.6:12; தீத்து 1:1–4; 1யோ.3:5–10) நித்திய ஜீவனைப் பெறுவது வேறு, நித்திய ஜீவனை மகிழ்ச்சியாய் அநுபவித்து அதற்கேற்ற நற்கிரியைகளை செய்வது வேறு என்பதை நாம் அறிய வேண்டும். இது இரண்டையும் நாம் குழப்பக்கூடாது. முதலாவது, கிருபையினாலே, இரண்டாவது நம் கிரியைகள் அவசியம். இதற்கு ஆவியிலே நிறைந்திருக்க வேண்டும். இதைக் குறித்து நாம் கிறிஸ்துவின் நியாயாசனத்திலே கணக்கொப்புவிக்க வேண்டும். (1கொரி. 3:12–15; 2 கொரி. 5:9–11; வெளி.3:11; 22:12)

## 06. நித்திய ஜீவனை அளிப்பதிலே திரியேக தேவனின் பங்கு

| | | |
|---|---|---|
| பிதாவாகிய தேவன் | – | யாக்கோபு 1:17–18 |
| குமாரனாகிய தேவன் (இயேசு கிறிஸ்து) | – | யோவான் 5:21; 2கொரி.5:17; 1யோ.5:12; யோ.10:28; யோ.17:2) |

பரிசுத்த ஆவியானவராகிய தேவன்– யோ.3:3–6; தீத்து 3:5

## 07. நித்திய ஜீவனின் மூன்று படிநிலைகள்

1. இந்த உலக வாழ்க்கையிலே – யோ.3:36
2. மரணத்திற்கும் சரீர உயிர்த்தெழுதலுக்கும் இடைப்பட்ட நிலையிலே – 2 கொரி. 5:1–9
3. உயிர்த்தெழுதலின் சரீரத்திலே – 1 கொரி.15:20,21; 35:57; 1தெச.4:13–18; 5:9,10

## 08. இன்றே அநுக்கிரக காலம்

பலர் ''அடுத்த ஜென்மம் என்று ஒன்று இருந்தால் பார்த்துக்கொள்ளலாம்'' என்று தவறாய் எண்ணுகின்றனர். ஆனால் ஒரே ஒரு தரம் மரிப்பதற்கும், பின்பு நியாயத்தீர்ப்பு அடைவதற்கும் மனுஷருக்கு நியமிக்கப்பட்டிருக்கிறது. (எபி.9:27). இந்த உலக வாழ்க்கையிலே மட்டுமே ஒரு மனிதனுக்கு நித்திய ஜீவனை (இயேசு கிறிஸ்துவை – 1யோ.5:12,13,20) பெற்றுக்கொள்ள முடியும். சரீர மரணத்திற்கு பிற்பாடு இயலாது. ஆகவே, இரட்சிக்கப்படாதவர்களுக்கு, இந்த காலமே ஒரே வாய்ப்பாகும். (2கொரி.6:2) நித்திய ஜீவனைப் பெறாமல் உலக ஓட்டத்தை நிறைவு செய்கிறவர்கள் நித்திய ஜீவன் இல்லாமல் நித்திய காலமாய் நித்திய ஆக்கினையை அநுபவிப்பார்கள். (மத்.25:46, வெளி. 20:10–15)

நித்திய ஜீவனை பெற்றுக்கொண்டவர்களாகிய நாம் கிறிஸ்துவின் நியாயாசனத்தில் நம்மில் ஒவ்வொருவரும் போய் நின்று நம்மைக் குறித்து கணக்கொப்புவிக்க வேண்டும் என்ற அறிவோடு, நமது வாழ்க்கையை வாழுவோம். நித்திய ஜீவனாகிய இயேசுவை அனேகருக்கு அறிவிப்போம். அநேகரை ஒளியிடம் கொண்டு வருவோம். இதன்மூலம் நட்சத்தரங்களைப் போல பிரகாசிப்போம். (தானி. 12:3) தம்முடைய திவ்விய சுபாவத்தில் நம்மை பங்குபெறச் செய்த திரியேக தேவனின் அன்பை மறவாதிருப்போம். மாரநாதா.

**– S. மோசஸ் ராஜ்**

---

## நன்கொடை அனுப்புவோர் கவனத்திற்கு

நன்கொடை மற்றும் காணிக்கை அனுப்புவோரும், வங்கியில் காணிக்கை செலுத்துவோரும் தயவு செய்து தங்கள் பெயர் மற்றும் முழு முகவரியை எமக்கு தெரிவிக்கவும். உரிய ரசீது கொடுக்க அது உதவிகரமாக அமையும். தங்கள் உதவிக்கும் ஒத்துழைப்புக்கும் நன்றி.

**பெயர் :** Newhope Mission (நியூஹோப் மிஷன்)
**எமது வங்கி கணக்கு எண் : 254901000557777**
**வங்கி : இந்தியன் ஓவர்சீஸ் வங்கி** (IOB)
**கிளை : மிடாலக்காடு** (Midalakkadu)
IFSC Code : IOBA 000 2549

நமது மிஷன் பணிக்களங்களை நேரில் பார்வையிட்டு ஜெபிக்க உங்களை அன்புடன் அழைக்கிறோம்.
தொடர்பு எண் : **9443155120 & 9442935233**

# உறவும் உறுதியும்!

அண்ணே! நீங்கள் கூறிய யோவான் 1:12 வசனத்தை படித்து, மனப்பாடமும் செய்து விட்டேன்!

சந்தோஷம் தம்பி! அதை சொல்லு பார்க்கலாம். ''அவருடைய நாமத்தின்மேல் விசுவாசமுள்ளவர்களாய் அவரை ஏற்றுக்கொண்டவர்கள் எத்தனைபேர்களோ, அத்தனைபேர்களும் தேவனுடைய பிள்ளைகளாகும்படி, அவர்களுக்கு அதிகாரம் கொடுத்தார்''.

பாராட்டுக்கள்! சரி, வசனத்தை சொல்லி விட்டாய், அதன் பொருள் தெரியுமா?

மிக நன்றாக தெரியும் அண்ணே!

அப்படியா? ஆச்சரியமாயிருக்கிறதே! சொல் பார்க்கலாம்!

''இயேசு கிறிஸ்து மேல் விசுவாசம் உள்ளவர்களை தேவன் தனது பிள்ளைகளாக ஏற்றுக்கொள்கிறார். சரிதானா?

பிரம்மாதம், தம்பி! மிகச்சரியாக சொன்னாய்.

இயேசு கிறிஸ்து நமது பாவத்திற்காக மரித்தார், உயிர்த்தெழுந்தார் என மனதில் முழு நிச்சயத்துடன் நம்புகிற அனைவரும் தேவனுடைய பிள்ளைகள் என இந்த வசனம் கூறுகிறது.

சரி! வசனத்தையும் கூறிவிட்டாய் பொருளையும் கூறிவிட்டாய். அந்த வசனத்தை நம்புகிறாயா?

என்ன அண்ணே, அப்படி கேட்டுவிட்டீர்கள்? முழு நிச்சயத்துடன் நம்புகிறேன்.

நல்லது! இயேசுவின் உயிர்த்தெழுதலை நம்புகிற நீ, யோவான் 1:12 வசனத்தின் படி தேவனுடைய பிள்ளைதான். சந்தேகமே இல்லை. தேவன் பொய் சொல்லாதவர்.

நான் தேவனுடைய பிள்ளை என்பதில் நானும் உறுதியாக இருக்கிறேன் அண்ணே!

தேவனுடைய பிள்ளை என உறுதியுடன் நம்புகிறவன் நிச்சயம் ஒரு நாள் நல்ல தலைவனாக வர முடியும். ஏனென்றால் தான்

தேவனுடைய பிள்ளை என்னும் உறுதியான மனதுடையவனே சிறந்த தலைவர்களாக ஆக முடியும். தேவனுடன் நமக்கு உள்ள தந்தை–மகன் உறவு நம்மை உறுதியுள்ள தலைவனாக மாற்றும். நல்ல குடும்ப தலைவனாகவும், நாட்டின் நல்ல தலைவனாகவும் வளர வேண்டும் எனில் ஒருவருக்கு தான் தேவனுடைய பிள்ளை என்ற மன உறுதி தேவை. அந்த மன உறுதி தேவனுடைய பிள்ளை என உறுதியாய் நம்புகிறவர்களுக்கே உருவாகும்.

நீயும் தேவனுடைய பிள்ளை என்ற நம்பிக்கையில் உறுதியாய் இருப்பதால் எதிர்காலத்தில் சிறந்த தலைவனாக வரமுடியும். இப்போதே என் அட்வான்ஸ் வாழ்த்துக்கள்!

நன்றி அண்ணே!

சரி, புறப்படட்டுமா தம்பி?

இந்த ஒரு சந்தேகத்தையும் தீர்த்துவிட்டு போங்க அண்ணே!

என்ன சந்தேகம்?

அபிஷேகம் என்றால் என்ன?

இப்போது நேரமில்லை, அடுத்து சந்திக்கும்போது விளக்குகிறேன்.

(தொடரும்)

**– எச்.ஆர்.கே**

---



## மருத்துவ குறிப்பு
# இலந்தை பழம்

தமிழ் இலக்கியத்திலும் இலந்தை பழம் குறித்து கூறப்பட்டுள்ளது. சிவப்பு, மஞ்சள் என இதில் பல வகைகள் உண்டு. இப்பழம் சிறியது எனினும் மிகுந்த மருத்துவ குணம் உள்ளது. இலந்தை பழத்தில் அதிக அளவு இரும்பு சந்தது உள்ளது. இது இரத்த விருத்திக்கு உதவி செய்து இரத்த சோகை நோயை கட்டுப்படுத்தும். இப்பழத்திலுள்ள நார்சத்து உடலின் கெட்ட கொலஸ்டிரால் அளவை குறைக்கும் திறனுள்ளது என கருதப்படுகிறது.

**–எச்.ஆர்.கே.**

# மனோவாவின் மனைவி – சிம்சோனின் தாயார் – நியாயாதிபதிகள் 13

நியாயாதிபதிகளின் வரிசையிலே சிம்சோன் என்பவர் முக்கியமானவர். அவர் கர்த்தரால் தெரிந்துகொள்ளப்பட்ட ஒரு நசரேயராயிருந்தார். இந்த சிம்சோனுடைய பிறப்பு கர்த்தரால் முன் அறிவிக்கப்பட்டதாயிருந்தது. அந்த பிறப்பைப் பற்றிய விபரம் மனோவாவின் மனைவியாகிய சிம்சோனின் தாயாருக்கே கூறப்பட்டது. பழைய ஏற்பாட்டில், நீ கர்ப்பந்தரித்து, ஒரு குமாரனைப் பெறுவாய் என்று கர்த்தர் நேரடியாக தெரிந்தெடுத்து கூறியதும் இந்த மனோவாவின் மனைவியிடமே.

மனோவாவின் மனைவியின் அழைப்பு மிகவும் அதிசயிக்கப்படத்தக்க விதமாய் அமைந்துள்ளதை நாம் காண முடிகிறது. நியாயா.13:13யின் வாசகங்களை நாம் ஆராயும்போது, புதிய ஏற்பாட்டில் லூக்கா 1:31ல் தேவதூதன் மரியாளை நோக்கி “இதோ நீ கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாய்” என்று கூறியதை நினைவு கூரும் வண்ணமாய் அமைந்திருக்கிறது. “கர்த்தருடைய தூதனானவன் அந்த ஸ்திரீக்குத் தரிசனமாகி அவளை நோக்கி, “இதோ, பிள்ளை பெறாத மலடியான நீ கர்ப்பந்தரித்து ஒரு குமாரனைப் பெறுவாய்” என்றார். நியாயா.13:3.

மேலும், நியாயா.13:5ல், “ ....அவள் தலையின்மேல் சவரகன் கத்தி படலாகாது. அந்த பிள்ளை பிறந்தது முதல் தேவனுக்கென்று நசரேயனாயிருப்பான்” என்று சொல்லியுள்ளது. பழைய ஏற்பாட்டில் கர்த்தருக்கென்று நசரேயனாக்கப்பட்டவன் இந்த சிம்சோனே. சிம்சோனின் தாயாருக்குத்தான் கர்த்தர் அதிசயவிதமாகக் காட்சி தந்தார்.

புதிய ஏற்பாட்டில் கர்த்தருக்கென்று நசரேயனாக்கப்பட்ட யோவான் ஸ்நாபகனின் பிறப்பும் முன்னறிவிக்கப்பட்டது. (லூக்கா 1:13–15) அங்கே அது அவளது தகப்பனாகிய சகரியாவுக்குக் கூறப்பட்டது. ஆனால் நியாயாதிபதிகளின் புஸ்தகத்தில் சொல்லப்பட்டுள்ள முன்னறிவிப்பு சிம்சோனின் தாயாரிடம் சொல்லப்பட்டதை நாம் காண்கிறோம். எவ்வளவு விசேஷித்த ஒரு பாக்கியத்தைப் பெற்றுக்கொண்டவள் இந்த பெண்மணி! இவர் தெரிந்தெடுக்கப்பட்ட ஒரு பெண்ணாக விளங்குகிறார். நியாயாதிபதிகள் 13–ம் அதிகாரத்தை நாம் நன்கு வாசித்துப் பார்க்கும்போது, மிக அழகிய ஒரு சரிதையைக் கண்டு கொள்ளலாம். மனோவாவின் மனைவி எனப்படும் அந்தப் பெண்மணியின் பெயர் சொல்லப்படாதது குறையாகக் காணப்பட்டாலும், அந்த அதிகாரம் முழுவதிலும் மனோவா தம்பதியர் ஆக்கிரமித்துள்ளதை நாம் காண முடிகிறது. “மனோவாவும் அவன்

மனைவியும் '' என்ற சொற்றொடர் திரும்ப திரும்ப பிரயோகிக்கப்பட்டுள்ளதை நாம் காண்கிறோம். அந்தப் பெண்மணி ஆசீர்வாத்தை பெற்றுக்கொண்டதை நாம் நியாயா. 13:24ல் வாசிக்கிறோம். ''பின்பு அந்த ஸ்திரீ ஒரு குமாரனைப் பெற்று, அவனுக்கு சிம்சோன் என்று பெயரிட்டாள். அந்தப் பிள்ளை வளர்ந்தது. கர்த்தர் அவனை ஆசீர்வதித்தார்''

கர்த்தருடைய தூதனானவர் இரண்டாம் தடவையும் அந்த பெண்மணிக்கே தரிசனமானார். அவர் மறுபடியும் வந்து தங்களுக்கு கற்பிக்க வேண்டும் என்று மனோவா விண்ணப்பம் பண்ணினபோதும், அந்த பெண்மணி வயல்வெளியில் தனியாக இருக்கும் போதே கர்த்தர் அவளுக்கு தரிசனமாகிறார். இதன் மூலம் எவ்வளவு விசேஷித்தவளாயிருந்தாள் என்று நமக்குத் தெரிய வருகிறது.

இவ்விதமாக, கர்த்தரின் பார்வையில் பெண்கள் மிக உயர்ந்த ஸ்தானத்தைப் பெற்றிருந்தார்கள். ''கர்த்தரின் அழைப்பும், தெரிந்து கொள்ளுதலும் மாறாதவைகளே'' என்று எழுதப்பட்டுள்ளதை நாம்அறிவோம். கர்த்தரின் அழைப்பைப் பெற்று, அவர் கூறினபடியே நடந்து, தனது கர்ப்பத்தில் ஒரு நசரேயனைப் பெற்றெடுத்த இந்த தாயாரை நாம் நினைவில் கொள்ளுவோம். நம் வாழ்விலும் கர்த்தரின் தெரிந்து கொள்ளுதல் நிறைவேறவும், அவருக்கு சாட்சியாக நாம் காணப்படவும் நம்மை அர்ப்பணிப்போமாக!

– **Mrs. S.P. செல்வி,** பெரும்புழி

## பணிக்கள சந்திப்பு

நமது மிஷனெரி பணிக்களங்களில் நடைபெறும் பணிகளை நேரடியாக பார்வையிட்டு அங்கு பணிபுரியும் மிஷன் பணியாளர்கள் மற்றும் அவர்கள் குடும்பத்தினரை சந்திக்கவும் விருப்பமுடையவர்களாய் இருக்கிறீர்களா? அப்படியானால் உங்கள் விருப்பத்திற்கு உறுதுணையாக நாங்கள் இருக்கின்றோம். நமது குழுவினர் வடஇந்திய மிஷனெரி பணிகளை பார்வையிட செல்லும்போது நீங்களும் எங்களுடன் இணைந்து கொள்ளலாம். உங்கள் வருகை வட இந்தியாவில் உள்ள புதிய கிறிஸ்தவ நண்பர்கள் யாவரையும் உற்சாகப்படுத்துவதாக அமையும். பணிக்களங்களை நேரில் சந்திக்க விரும்புவோர் தொடர்பு கொள்ளவும்.

**குறிப்பு:**

ஆயுள்சந்தா ரூ.2000/– செலுத்துபவர்களுக்கு புது நம்பிக்கை வெளியீடுகள் அனைத்தும் இலவசமாக அனுப்பித் தரப்படும்.

"இடைவிடாமல் ஜெபம் பண்ணுங்கள் ...." (1 தெச.5:17)

# ஜெப விண்ணப்ப குறிப்புகள்

☞ ஆந்திர மாநிலம் கிழக்கு கோதாவரி மாவட்டத்தில் கட்டப்பட்டு வரும் சபையின் தேவைகளுக்காக ஜெபிப்போம்

☞ சகோ.ரமேஷ் வேலை செய்த இடத்தில், கிடைக்க வேண்டிய தொகை தடைகள் நீங்கி கிடைக்க ஜெபிப்போம்.

☞ புத்தாண்டிலே நமது மிஷனெரி பணிகள் வளர்ந்து தேவ நாமம் மகிமைப்பட

☞ இந்தியாவில் குறிப்பாக, ஜம்மு காஷ்மீரில் சமாதானம் நிலவவும், அங்கு நடைபெற்று வரும் பல்வேறு மிஷனெரி இயக்க பணிகள் வளரவும்

☞ சத்தீஸ்கரில் நடைபெற்று வரும் மிஷனெரி பணிகளின் வளர்ச்சிக்காக

☞ மத்திய பிரதேச மிஷனெரிகளின் ஊழிய வளர்ச்சிக்காக

---

# வேதாகம வினா – விடை போட்டி – 2018

வேதாகம பகுதி : – **யோவேல் – யோனா**

1. யோவேல் புத்தகத்தில் கர்த்தர் என்ற வார்த்தை எத்தனை முறை கூறப்பட்டுள்ளது ?
2. கீருக்கு சிறைப்பட்டு போன ஜனங்கள் யார் ?
3. யாரிடத்தில் விற்றுப் போட்டார்கள் ?
4. அறுப்புக் காலத்திற்கு எத்தனை மாதங்கள் இருந்தன ?
5. பழம், பறவை , சாப்பிடும் பொருள், வானத்தில் உள்ளவை ஒபதியாவில் இவை எங்குள்ளது குறிப்பிடுக.
6. விழுந்து போன கூடாரம் எது ?
7. தேவாலயத்தின் பாட்டுகள் என்னமாய் மாறும் ?
8 ஜல்லடை என்ற வார்த்தை எங்குள்ளது ?
9. திராட்சை என்ற வார்த்தையோவேல் – ஒபதியாவில் எத்தனை முறை உள்ளது ?
10. யோனா புத்தகத்தில் எத்தனை வசனங்கள் உள்ளது ?

விடைகளை அனுப்ப வேண்டிய முகவரி
**S. Vasantha Nesam,** 23- Eastaff Street, Nagercoil - 629 001
Cell : 9789183072

விடைகள் வந்துசேர வேண்டிய கடைசி நாள் : **மார்ச் 15, 2018**

அக்டோபர்-டிசம்பர் இதழ் போட்டிக்கான சரியான விடை எழுதியவர்கள்

**1. Mrs. அபிஷா, 2. Mrs. லின்சி யூஜின், 3. Mrs. சுனி ஆல்பிரட், 4. மாஸ்டர். ரினில், 5. Mrs. ஸ்டெல்லா அலெக்ஸ், 6. Mrs. சந்திரமதி ராஜா, 7. Mrs. பொன்னேசம் ராஜா, 8. Mrs. இன்ப ராஜபிரீடா, 9. Mrs. சாந்தி சாலோமோன், 10. Mrs. பமிலா எட்வின், 11. Mrs. ஷீபா மோகன்.**

# இறைமக்களுக்கு இறைவனின் நிபந்தனைகள்

| மத்தேயு 3:2; 4:17 | பரலோகம் வேண்டுமா ? | மனந்திரும்ப வேண்டும் |
|---|---|---|
| நீதிமொழிகள் 28:13 | இறைவனிடம் இரக்கம் பெற வேண்டுமா ? | பாவங்களை அறிக்கையிட்டு விட்டுவிடு |
| யோவான் 5:14 | உனக்கு அதிக கேடானது வராதிருக்க வேண்டுமா ? | இனி பாவம் செய்யாதே |
| யாத்திராகமம் 15:26 | நீங்கள் இறை கட்டளைக்கு கீழ்ப்படியுங்கள் | ஏகிப்தியருக்கு வந்த வாதைகள் உங்களுக்கு வர இறைவன் விடமாட்டார் |
| நீதிமொழிகள் 29:1 | சகாயமின்றி சடுதியில் நாசமடைபவன் யார் ? | அடிக்கடி கடிந்துகொள்ளப்பட்டும் பிடரியை கடினப்படுத்துகிறவனே |
| யாத்திராகமம் 20:12<br>உபாகமம் 5:16<br>எபேசியர் 6:2 | உன் ஆயுள் நீடிக்க வேண்டுமா ? | பெற்றோரைக் கனம் பண்ணு |
| லூக்கா 11:4<br>மத்தேயு 6:12 | பிறருக்கு நாங்கள் மன்னிக்கிறோம். எனவே இறைவா எமக்கு நீர் மன்னித்தருளும் | |
| மத்தேயு 6:14,15 | பிறரை பலவேளைகளில் மன்னியாத நம்மை இறைவன் எப்படி மன்னிப்பார் ? எனவே | |
| எபேசியர் 4:32 | கிறிஸ்துவுக்குள் தேவன் நம்மை மன்னித்திருப்பது போல நாமும் பிறரை மன்னிக்க கடமைப்பட்டுள்ளோம் | |
| மத்தேயு 6:24 | உன் காணிக்கைகளை தேவன் ஆசீர்வதிக்க வேண்டுமா ? | சுகமனிதரிடம் ஒப்புரவாகு |
| மத்தேயு 5:8<br>எபிரேயர் 12:14 | தேவனைத் தரிசிக்க வேண்டுமா ? | உன்னை நீ பரிசுத்தமாக்கு |
| மத்தேயு 5:10 | நீதியினிமித்தம் துன்பமா ? | அது பரலோகில் நம்மைச் சேர்க்கும் |
| மத்தேயு 7:21 | பரலோகம் அடைய வேண்டுமா ? | தேவ சித்தம் செய்திடு |
| மத்தேயு 5:44 | நீ இறைவனின் பிள்ளையாக இருக்கிறாயா ? | சத்துருவை சிநேகி;<br>சபிப்போரை ஆசீர்வதி;<br>பகைப்போர்க்கு நன்மை செய்;<br>நிந்திப்போருக்காகவும், துன்புறுத்துவோருக்காகவும் இறைவனிடம் மன்றாடு |
| மத்தேயு 5:48 | இறைவன் பூரண சற்குணராயிருப்பது போல, நாமும் பூரண சற்குணராக வேண்டும் | |

| | | |
|---|---|---|
| மத்தேயு 6:33 | நன்மைகளைக் கூடுதலாக பெற வேண்டுமா ? | முதலாவது தேவனுடைய ராஜ்யத்தையும் அவருடைய நீதியையும் தேட வேண்டும் |
| வெளிப்படுத்தல் 22:12 | அவனவன் கிரியைகளுக்கக்குத் தக்கபடி இறைவன் பலனளிப்பார் | |
| உபாகமம் 11:26–28 | கற்பனைகளுக்கு கீழ்ப்படி ஆசீர்வாதம். அந்நிய தேவர்களை பின்பற்றினால் சாபம் | |
| ஆதியாகமம் 4:7 | நன்மை செய்தால் மேன்மை உண்டு | |
| நீதிமொழிகள் 28:9 | வேதத்தைக் கேளாதவனின் ஜெபத்தை இறைவன் அருவருக்கிறார் | |
| யாக்கோபு 1:12 | ஜீவகிரீடம் வேண்டுமா ? | சோதனைகளைச் சகிக்க வேண்டும் |
| ஏரேமியா 15:19 | உன்னை இறைவன் சீர்ப்படுத்த வேண்டுமா ? | நீ இறைவனிடம் திரும்பி வர வேண்டும் |
| லூக்கா 15:11–32 | இறைவன் தமது மகனாக உன்னை ஏற்றுக்கொள்ள வேண்டுமா ? | நீ திருந்திய மைந்தன் போல இறைவனிடம் திரும்பி வந்து ஒப்புரவாக வேண்டும் |
| யோவான் 15:7 | இறைவனிடம் நாம் கேட்பது நமக்குக் கிடைக்க வேண்டுமா ? | நாம் கிறிஸ்து இயேசுவிலும் அவருடைய வார்த்தை (சத்தியம்) நம்மிலும் நிலைத்திருக்க வேண்டும் |
| யோசுவா 3:5 | வருங்காலத்தில் அற்புதங்களை கண்டுகொள்ள வேண்டுமா ? | இக்காலத்தில் நம்மை சுத்திகரிக்க வேண்டும் |
| உபாகமம் 11:27 | ஆசீர்வாதம் எப்போது வரும் ? | கற்பனைகளுக்கு கீழ்ப்படியும்போது |
| மத்தேயு 12:36 | நியாயத்தீர்ப்பு நாளில் எதற்காகக் கணக்கொப்புவிக்க வேண்டும் ? | நாம் பேசிய வீணான வார்த்தைகளுக்காக |
| மல்கியா 3:16 | கர்த்தரின் ஞாபக புத்தகத்தில் நமது பெயர்கள் காணப்பட வேண்டுமா ? | கர்த்தருக்கு பயந்து அவர் நாமத்தை தியானிக்க வேண்டும் |
| சங்கீதம் 34:7 | கர்த்தரின் தூதன் யாரை சூழ பளயமிறங்கி விடுவிக்கிறான் ? | கர்த்தருக்கு பயந்திருப்போரை |
| மத்தேயு 18:3 | மனந்திரும்பி பிள்ளைகளைப் போலாகாவிட்டால் | பரலோகில் பிரவேசிக்க மாட்டீர்கள் |
| எபேசியர் 2:10 | நாம் எதற்காக சிருஷ்டிக்கப்பட்டோம் ? | நற்கிரியைகளைச் செய்வதற்கு இயேசு கிறிஸ்துவுக்குள் |

| | | |
|---|---|---|
| வெளி. 2:5 | மனந்திரும்பாவிட்டால் | உன் விளக்குத்தண்டை அதனிடத்தினின்று நீக்கி விடுவேன் |

அருள் அரசு தொகுப்புகள்
A. **ஜாண்ராஜ் ஆசிரியர்**

---

**மலர்–1 இதழ்–4 ன் (தானியேல், ஓசியா) விடைகளுக்கான வசன பகுதி**

**1.** ஆரியோகு, (தானி. 2:15), **2.** 32 முறை, **3.** தானியேல் (தானி. 4:8),
**4.** உங்களுக்கு சமாதானம் (தானி. 4:8), **5.** வேசித்தனம் / திராட்சை ரசம். ஓசி.1:11,
**6.** ஆகோரின் பள்ளத்தாக்கு (ஓசி. 2:13), **7.** ஆதாம் (ஓசி. 6:7), **8.** ஓசி. 7:4,
**9.** ஓசி. 10:4, **10.** ஓசி. 13:2,

---

# முன்னேற்ற பணியாளர்கள் தேவை

மிஷன் பணிக்களங்களில் பணியாற்றும் மிஷனரிகளுக்கு **புதுநம்பிக்கை** மிஷன் பல்வேறு வகைகளில் உதவி செய்து வருகிறது. மிஷனரிகளுக்கு உதவி செய்யும் மிஷனரி பணியில் ஆர்வமுள்ள தன்னார்வ முன்னேற்ற பணியாளர்கள் தேவை. தாங்கள் வாழ்ந்து வரும் பகுதியிலேயே இப்பணிகளை செய்யலாம். மிஷனரி பணியில் ஆர்வமுள்ள கிறிஸ்தவ சகோதரர் / சகோதரிகள் இப்பணிகளை ஜெபத்துடன் செய்யலாம். (நேரில் வர விரும்புவோர் முன் நேரம் குறித்து வரவும்)


எமது அலுவலக முகவரி:
**புது நம்பிக்கை மிஷன்**
75/33, ஐசக் தெரு, நாகர்கோவில் - 629 001.
தொடர்பு எண் : 9442935233


## ஜெப மற்றும் குடும்ப ஆலோசனை

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே!

உங்கள் ஜெபத்தேவைகள் மற்றும் குடும்பம், வேதாகமம் குறித்த ஆலோசனைகளுக்கு எங்களை தொடர்பு கொள்ளவும். ஜெபித்து ஆலோசனை கூறி உதவ ஆயத்தமாயிருக்கிறோம்.

**தொடர்பு எண் : 9442935233**

# அஞ்சல் வழி வேதாகம பயிற்சி

**வேதாகம கல்லூரி படிப்பு மையங்கள் :**

நாகர்கோவில், மார்த்தாண்டம், இரணியல், திருநெல்வேலி, கருங்கல், ஈரோடு, திருப்பூர், திருவண்ணாமலை.

இறையியல் மற்றும் வேதாகமத்தை முறைப்படி படிக்க ஓர் அரிய வாய்ப்பு. தேவனுடைய வார்த்தை தெளிவாக கற்று தேற உதவும் வகையில் கீழ்கண்ட பயிற்சிகள் நேரடி வகுப்பு மற்றும் அஞ்சல் வழியாக வழங்கப்பட்டு வருகிறது. ஆர்வமுள்ள அனைவரும் படிக்கலாம்.

| படிப்பு | காலம் | தகுதி |
|---|---|---|
| Bachelor of Theology | 3 ஆண்டுகள் | +2 தேர்ச்சி |
| Bachelor of Bible Studies | 2 ஆண்டுகள் | தமிழ் படிக்க தெரிந்தவர்கள் |
| Master of Divinity | 2 ஆண்டுகள் | B.Th |
| Master of Ministry | 2 ஆண்டுகள் | B.B.S |
| Master of Theology | 2 ஆண்டுகள் | M.Div. |
| Diploma in Biblical Hebrew | 2 ஆண்டுகள் | தமிழ் தெரிந்தவர்கள் |



ஆர்வமுள்ள கிறிஸ்தவ ஆண் / பெண் இருபாலரும் படிக்கலாம். தமிழ் மற்றும் ஆங்கில வழியில் படிக்க வசதியுண்டு. குறைந்த கட்டணம் தரமான பயிற்சி.

மேலும் விபரங்களுக்கு:–


**Director**

**CALS - Bible Course**

Harris House,

8/69-c, Manvilagam, Reethapuram P.O.

K.K.Dist - 629 159

Cell : 9442935233

# பாடல் புத்தகம் – வெளியீடு

சபை ஆராதனை, வீட்டு ஜெபக்கூட்டம், தனி ஜெபத்தில் தேவனை பாடி துதிக்க பக்தி பரவசம், இனிமையான பாடல்களின் தொகுப்பு. 500–க்கும் மேற்பட்ட பழைய, புதிய பாடல்கள் மலையாள, ஆங்கில பாடல்களும் உண்டு. பாடல் புத்தகத்தின் விலை ரூ. 70/–

**எமது இதர வெளியீடுகள்**

யூத பண்பாடும் வசன விளக்கமும் – ரூ. 30/–

சபை உடைதலை தடுக்கும் வழிகள் – ரூ. 120/–

சபை நிதி பெருகும் வழிகள் – ரூ. 70/–



குறிப்பு:– அனைத்து கிறிஸ்தவ புத்தக நிலையங்களிலும் கிடைக்கும்

தொடர்பு எண்: 9442935233




## புது நம்பிக்கை வெளியீடுகள்

வேதாகமத்தின் ஆழமான சத்தியங்களை புரிந்து கொள்ள "யூத பண்பாடும் வசன விளக்கமும்" என்னும் நூல் வெளியிடப்பட்டுள்ளது. வேத வசனங்களில் வரலாற்று மற்றும் கலாச்சார பின்னணியில் வசனங்களை புரிந்து கொள்ளவும் ஆவிக்குரிய முறையில் விசுவாசிகள் வளரவும் பயனுள்ள விளக்கங்கள் இப்புத்தகத்தில் உள்ளன. அனைத்து கிறிஸ்தவர்களும் படிக்க வேண்டிய புத்தகம். வேதாகம பள்ளி மாணவர்கள் மற்றும் ஆசிரியர்களுக்கு பரிசளிக்க தகுந்த சிறந்த புத்தகம்.

குறிப்பு:– அனைத்து கிறிஸ்தவ புத்தக நிலையங்களிலும் கிடைக்கும்

தொடர்பு எண்: 9442935233

## ஈஸ்ட் கோதாவரி மாவட்டத்தில் (ஆந்திரா) கட்டப்பட்டுவரும் சபை





ஆந்திரா மாநில ஏரம்பாளயம் சபை மக்கள் மற்றும்
சபை ஞாயிறு பள்ளி சிறுவர்களின் கிறிஸ்மஸ் கொண்டாட்டம்






Editor : S. Moses Raj, (Mobile : 7502071054),
Published by : New Hope Mission,
75/33, Isaac St. Nagercoil - 629 001.
Contact : 9442935233
e-mail: newhopebharat@gmail.com
website : www.newhopebharat.org
Printed at : Latha Press, 9791659601